உ

கணபதி துணை

ஆறுமுகக்கடவுள் துணை.

அறுபத்துமூன்றுநாயன்மார்கள்

அடிமைத்திறம்

# நம்பியாண்டார் நம்பி

அருளிச்செய்தகலித்துறைத்

## திருவந்தாதி.



பரம்பரையில் சைவகுலாசாரியர்களும்
உபயவித்துவான்களுமாகிய திருவாரூர்த் திருக்கூட்டங்
களிலொருவராகிய
கீழ்வேளூர், உக்ஷிணாமூர்த்திதேசிகர்குமாரர்

## சுப்பிரமணியதேசிகரால்

புரசைபாக்கந்தொண்டைமண்டல
வேளாளர்களில் செங்கல்வராயமுதலியார்,
வயித்தியலிங்கமுதலியார், சரவணப்பெருமாள்முத
லியார், இம்மூவருங்கேட்டுக்கொண்டபடியால்,
சுத்தபாடமானபலபிரதிகளைக்கொண்டு
பரிசோதித்து

சென்னபட்டணங்கல்விவிளக்கவச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.



மன்மத௵, தைப்பூசம்.

இதன்விலை-அணா. ௨.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி

## திருவந்தாதி

துதிகவி.

பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமு க
மன்ன னறுபத்து மூவர் பதிதே மரபுசெய ல்
பன்னவத் தொண்டத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

❋தில்லைவாழந்தணர்.❋

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறை யோ
ரொப்பப் புவனங்கண் மூன்றினு மும்பரி னூரொரித் த
வப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந் த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. [(௧)

❋திருநீலகண்டக்குயவநாயனார்.❋

சொல்லச் சிவன்திரு வாணைதன் றூமொழி தோணகை யா
லொல்லைத் துறந்தரு மூத்ததற் பின்னுமை கோனருளா ல்
வில்லைப் புரைநுத லாளொ டிளமைபெற் றின்பமிக்கா ன்
றில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே. . . (௨)

❋இயற்பகைநாயனார்.❋

செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவன்றவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலு மே
மைதிகழ் கண்ணியை யீந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வ ந்
தெய்திய காவிரிப் பூம்பட்டி னத்து ளியற்பகையே. . . (௩)

### ❋இளையான்றன்குடிமாறநாயனார்.❋

இயலா விடைச்சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத் த
வயலார் முளைவித்து வாரி மனையலக் கால்வறுத்து ச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன்செழுநீர் க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங் கற்பகமே. . . (௪)

### ❋மெய்ப்பொருணாயனார்.❋

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவா ய் [தாற்
மற்றவன் றத்தா நமரோ யெனச்சொல்லி வானுலக ம்
பெற்றவன் சேதியன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரோ. (௫)

### ❋விறன்மிண்டநாயனார்.❋

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவ னை
மீசன் றனையும் புறகுதட் டென்றவ னீசனுக் கே
நேச னெனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்ற ல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே. (௬)

### ❋அமர்நீதிநாயனார்.❋

மிண்டும் பொழிற்பழை யாறை யமர்நீதி வெண்பொடியி ன்
முண்டந் தரித்த பிராற்குநல் லூரின்முன் கோவணநே ர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
றுண்ட மதிநுத லாளையு மீந்த தொழிலினனே. . . (௭)

### ❋சுந்தரமூர்த்திநாயனார்.❋

தொழுதும் வணங்கியு மாலயன் றேடருஞ் சோதிசென்று ங்
கெழுதுந் தமிழ்ப்பழ வாவணங் காட்டி யெனக்குன்கு டி
முழுது மடிமைவந் தாட்செ யெனப்பெற்ற வன்முர றே
னொழுகு மலரினற் றாரெம் பிரானம்பி யாரூரனே. . (௮)

### ❋எறிபத்தநாயனார்.❋

ஊர்மதின் மூன்றட்ட வுத்தமர்க் கென்றே ருயர்தவத்தோ ன்
றார்மலர் கொய்யா வருபவன் றண்டின் மலர்பறித் த
ஊர்மலைமேல்கொளும் பாக ருடறுணி யாக்கும வ
னேர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தனே. . . (௯)

❊ஏனாதிநாதநாயனார்.❊

பத்தனை யேனாதி நாதனைப் பார்நீ டெயினிதன் னு
ஏத்தனைத் தன்னோ டமர்மலைந் தானெற்றி நீறுகண் டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றரு ளு
நித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே. . . (௰)

❊கண்ணப்பநாயனார்.❊

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின் மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங் கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினா ன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னாமென்று கூறுவரே. . (௰௧)

❊குங்கிலியக்கலயநாயனார்.❊

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தா ட்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடு த்
தாய்ந்த நற்குங்கிலி யங்கொண் டனற்புகை காலனைமு ன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. . . (௰௨)

❊மானக்கஞ்சாறநாயனார்.❊

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழ லை
நலசெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கென வு
மலசு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தா ன்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாறனெனும் வள்ளலே (௰௩)

❊அரிவாட்டாயநாயனார்.❊

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோ னுகலுமிங் கே
வெள்ளச் சடையா யமுதுசெய் யாவிடி லென்றலையை த்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன் கா
னள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. . (௰௪)

❊ஆனாயநாயனார்.❊

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத் த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவு ம்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக் கோ
னாயவ னானாய னென்னையு வந்தாண் டருளினனே. . (௰௫)

### சுந்தரமூர்த்திநாயனார்.

அருட்டுறை யத்தர்க் கடிமைப்பட் டேனினி யல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேயென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய லாவற் பதிக்கும் பிரானடைந்தோர்
மருட்டுறை நீக்கிதல் வான்வழி காட்டிட வல்லவனே. • (௰௬)

### மூர்த்திநாயனார்.

அவந்திரி குண்டம ணாவதின் மாள்வனென் றன்றாலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்தல காண்டவொண்மூர்த்திதன்
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே. (௰௭) [னார்

### முருகநாயனார்.

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயி லுவினன்சீர்
மதியஞ் சடையார்க் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
துதியுங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் றொண்டரம்பொ
னதிகம் பெறும்புக லூர்முரு கன்னெனு மந்தணனே. (௰௮) [ன்

### உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ் புனறன்னி லல்லும் பகலுநின் றாதரத்தா
லுந்தாத வன்பொ டுருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த
வைந்தா ருருத்திர பசுபதி தன்னற் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரொன் றுளாப்பரிந் நாணிலத்தே. • (௰௯)

### திருநாளைப்போவார்நாயனார்.

நாவார் புகழ்த்தில்லை யம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருத் தொண்டன் றன்புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியா யவன்பதிதான்
மாவார் பொழிறிக ழாதனூ ரொன்பரிம் மண்டலத்தே. (௨௰)

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

மண்டும் புனற்சடை யான்றமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகா லியர்தங்க டொல்குலமே. (௨௧)

## தண்டீசநாயனார்.

குலமே றியசேய் ஞலூரிற் குரிசில் குரைகடல்சூ ழ்
தலமே றியவிறற் றண்டிகண் டீர்தந்தை தாளிரண்டு ம்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடி மே
லலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே. . (௨௨)



## சுந்தரமூர்த்திநாயனார்.

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந் த
மதியேற் கறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றிடென் று
துதியா வருள்சொன்ன வாறறி வாரிடைப் பெற்றவன் கா
ணாதியார் புனல்வய னாவலர் கோனென்னு நற்றவனே. . (௨௩)



## திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்க ப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற் கு
னாற்றவ னுற்ற விடமடை யாரிட வெள்ளமுதா த்
துற்றவ னாரூரி னாவுக் கரசெனுந் தூமணியே. . . . . (௨௪)

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியா ற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலி ற்
பிணியன வன்கன் மிதப்பித்த சைவப் பெருநெறிக் . கே
யணியன நாவுக் கரையர்பி ரான்ற னருந்தமிழே. . . . (௨௫)



## குலச்சிறைநாயனார்.

அருந்தமி ழாகரன் வாதி லமணைக் கழுநுதி மே
லிருந்தமிழ் நாட்டிடை யேற்றுவித் தோனெழிற்சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் றன்னதி காரி பிரசமல் கு
குருந்தவிழ் சாரன் மணமேற் குடிமன் குலச்சிறையே. (௨௬)

## மிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன் புனற்றிரு நாவலூ ராளி செழுங்கயிலை க்
கிறைநன் கழனாளை யெய்து மிவனருள் போற்றவின் றே
பிறைநன் முடியன் னடியடை வேனென் றுடல்பிரிந் தா
னறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்ப னெனுநம்பியே. (௨௭)

❊காரைக்காலம்மையார்❊

நம்பன் திருமலை நான்மிதி யேனென்று தாளிரண் டு
மும்பர் மிசைத்தலை யானடந் தேற வுமைநகலு ஞ்
செம்பொன் னுருவனென் னம்மையெனப் பெற்றவள்செழுந்தே
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே. (௨௮) [ன்

❊அப்பூதியடிகணாயனார்.❊

தனமா வதுதிரு நாவுக் கரசின் சரணமென்னு
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத் தனது பெயரிடப் பெற்றவ னெங்கள்பிரா
னனமார் வயற்றிங்க ளூரினில் வேதிய னப்பூதியே. . (௨௯)

❊திருநீலநக்கநாயனார்.❊

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலுமஞ் சி
பூதித் துமித்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லா ம்
பேதித் தெழுந்தன காணென்று பிஞ்ஞகன் காட்டும வ
வீதித் திகழ்சாத்த நீலநக் கன்னெனும் வேதியனே. . (௩௰)

❊நமிநந்தியடிகணாயனார்.❊

வேதமறிக் கரத் தாரூ ரரற்கு விளக்கு நெய்யை த்
தீது செறியமண் கையரட் டாவிடத் தெண்புன லா
லேத முறுக வருகவொன் றன்று விளக்கெரித் தா
ரூத லெழிலேமப் பேறா ரதிபனமிநந்தியே. . . . . . (௩௧)

❊சுந்தரமூர்த்திநாயனார்.❊

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரி னாயகற்கு ப்
பந்திப் பரியனை செந்தமிழ் பாடிப் படர்புனலி ற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடி யே
வந்திப் பவன்பெயர் வன்றொண்டனென்பரிவ் வையகத்தே.(௩௨

❊திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.❊

வைய மகிழயாம் வாழ வமணர் வலிதொலை ய
ஐயன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வா ய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தி ன்
றைய லருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே. . (௩௩)

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல் ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந் து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத் த
வந்தாதி கொண்டபி ரானருட் காழியர் கொற்றவனே. (௫௪)



### ❋எயர்கோன்கலிக்காமநாயனார்❋

கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லா
தெற்றச் சடையாய் நினதடி யெந்திகழ் வன்றொண்டனே [ந்
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவியந்நோ ய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியெயர் சீர்க்குடியே. (௫௫)

### ❋திருமூலநாயனார்.❋

குடிமன்னு சாத்தனூர் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை மூழுத்தமிழின் [கு
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச் சி
யடிமன்ன வைத்தபி ரான்மூல னாகின்ற வங்கணனே. (௫௬)

### ❋தண்டியடிகணாயனார்.❋

கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறுபிடித்தரற்கு த்
தண்ணார் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமண ர்
கண்ணாங் கிழப்ப வமணர் கலக்கங்கண் டம்மலர்க்க ண்
விண்ணா யகனிடைப் பெற்றவ னாரூர் விறற்றண்டியே. (௫௭)

### ❋மூர்க்கநாயனார்.❋

தண்டலை சூழ்திரு வேற்காட்டூர் மன்னன் றருகவற்று ற்
கொண்டவல் லாயம்வன் சூதனை வென்றுமுன் கொண்டபொரு
முண்டநன் னீற்ற னடியவர்க் கீபவன் மூர்க்கனென்பர் [ண்
தண்டலை நீடொண் குடந்தையின் மேவுநற் சூதனையே. (௫௮)

### ❋சோமாசிமாறநாயனார்.❋

சூதப் பொழிலம்ப ரந்தணன் சோமாசி மாறனென்பா ன்
வேதப் பொருளஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழி யா
நீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவையென் னு
மாதுக்குக்காந்தன்வன் றொண்டன்றனக்குமகிழ்துணையே.(௫௯)

### சுந்தரமூர்த்திநாயனார்.

துணையு மளவுமில் லாதவன் றன்னரு ளே துணையா க்
கணையுங் கதிர்நெடு வேலுங் கருத்த கயலிணையு ம்
பிணையு நிகர்த்தகட் சங்கிலிப் பேரமைத் தோளிரண் டு
மணையும் வன்றிரு வாரூர னாகின்ற வற்புதனே. (௪௰)

### சாக்கியநாயனார்.

தகடன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையி ன்
மகடனந் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொ
நிகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப் ன்
புகழ்தரப் புக்கவ னார்சங்க மங்கை புவனியிலே. (௪௧)

### சிறப்புலிநாயனார்.

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந் த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய் தத்துவ காரண னு
மவனியிற் கீர்த்தித்தென் னாக்கூ ரதிப னருமறையோ ன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே. (௪௨)

### சிறுத்தொண்டநாயனார்.

புலியி னதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தன தோ
லொலியின் சதங்கைக் குதலைப் புதல்வ னுடலறுத்து க்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண்செங் காட்டங் குடியவர் மன்னவனே.

### சேரமான்பெருமாநாயனார். (௪௩)

மன்னர்பி ரானெதிர் வண்ணா னுடலுவ ரூறிய நீ ற்
றன்னபி ரான்றமர் போல வருதலுந் தான்வணங் க
வென்னபி ரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னு ந்
தென்னர்பி ரான்கழ றித்தறி வோனெனுஞ் சேரலனே. (௪௪)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித் த
பாரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத் த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வென்றிகொண் ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய் தாயின்று தொன்றுபட்டே (௪௫

### கணநாதநாயனார்.

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே. (௪௬)

### கூற்றுவநாயனார்.

நாதன் திருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல் லாமொரு கோலின்வைத்தான்
சோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே. (௪௭)



### சுந்தரமூர்த்திநாயனார்.

கூற்றுக் கெவனோ புகதிரு வாரூரன் பொன்முடிமே
லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங்கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே. (௪௮)



### பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற் பொய்ம்மையி லாத்தமிழ்ச் சங்கமதிற்கபிலர்
பரணர்நற் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கியுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. (௪௯)

### புகழ்ச்சோழநாயனார்.

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததொர் வண்புகழே. (௫௰)

### நரசிங்கமுனையரையர்நாயனார்.

புகழும் படியெம் பரமே தவர்க்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கு
திகழும் படிகண் டவற்கன் றிரட்டிபொன் னிட்டவனி
நிகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே. (௫௧)

❋அதிபத்தநாயனார்.❋

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கெ ன்
றிறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கன க
நிறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமல ம்
புறமமர் நாகை யதிபத்த னாகிய பொய்யிலியே. . . (ருஉ)

❋கலிக்கம்பநாயனார்.❋

பொய்மைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியா
னைசவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ [ன்
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனை வி
லகையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிக்கம்பனே. (ருங

❋கலியநாயனார்.❋

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுத லோ
னும்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனாய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியி னா
னம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே. . (ருச)

❋சத்திநாயனார்.❋

கிரிவில் லவர்தம் மடியனைத் தன்முன்பு தீமைசொன் ன
திருவில் லவனையந் நாவரி வோன்றிருந் தாளைவெல்லு ம்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென் ற
றெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே.(ருரு)

❋ஐயடிகட்காடவர்கோநாயனார்.❋

சத்தித் தடக்கைக் குமரனற் றாதைதன் றானமெல் லா
முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து முடியர சா
மத்திற்கு மும்மைநன் றாளரற் காயைய மேற்றலென்னு ம்
பத்திக் கடலை யடிகளரா கின்றநம் பல்லவனே. . . (ருசா)

❋சுந்தரமூர்த்திநாயனார்.❋

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புக ழ்
சொல்லவன் றென்புக ழூரான் பரற்றுய்ய செம்பொன்கொள்
வல்லவ னாட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு [ள
நல்லவன் றன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே. . . (ருஎ)

❋கணம்புல்லநாயனார்.❋

நன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய் ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத் து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தா ன்
கன்னவி றோளெந்தை தந்தைபி ரானெங்க ணம்புல்லனே. ௫௮

❋காரிநாயனார்.❋

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவு ஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுத ணி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பரா ற்
கல்லின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. (௫௯)

❋நெடுமாறநாயனார்.❋

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதி ரா
யார்த்த வமண ரழிந்தது கண்டுமற் றுங்கவரை க்
கூர்த்த கழுவி னுதிவைத்த பஞ்சவ னென்றுரைக்கு ம்
வார்த்தை யதுபண்டு நெல்வே லியில்வென்ற மாறனுக்கே. ௬௰

❋வாயிலார்நாயனார்.❋

மாறு வருளான் றன்னை மனவா லயத்திருத் தி
யாறு வறிவா மொளிவிளக் கேற்றிய கமலரா ம்
வீறு மலரளித் தன்பெனு மெய்யமிர் தங்கொடுத்தா ன்
வீறூர் மயிலையுள் வாயிலா னென்று விளம்புவமே. (௬௧)

❋முனையடுவார்நாயனார்.❋

என்று விளம்புவர் நீடு ரதியன் முனையடு வோ
னென்று மமருள ழிந்தவர்க் காய்க்கூலி யேற்றெறிந் து
வென்று பெருஞ்செல்வ மெல்லாங் கனகநன் மேருவென் னு ங்
குன்றம் வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே. (௬௨)

❋சுந்தரமூர்த்திநாயனார்.❋

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்ற ம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தே ன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே. (௬௩

### கழற்சிங்கநாயனார்.

மாதவத் தோர்தங்கள் வைப்பினைக் காரூர் மணிக்குவைத் தே
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை யரியப்பொற்கை
சாதிவைத் தன்றே வரிவதென் றுங்கவள் கைதடிந் தா
னாதமொய்த்தார் வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே. (௬௪)

### இடங்கழிநாயனார்.

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுக டு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோ ன்
திங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோ க்
கெங்கட் கிறைவ னிருக்குவே ளூர்மன் னிடங்கழியே. (௬௫)

### செருத்துணைநாயனார்.

கழிநீள் கடனஞ் சயின்றூர்க் கிருந்த கடிமல ளா
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோந்ததுமே
பெழினீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவரா ற்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே. ௬௬

### புகழ்த்துணைநாயனார்.

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத் தா
யுருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செ ய்
தருவதோர் பொதுகை சோர்ந்து கலசம் விழத்தரி யா
தருவளா வில்லி யருளி னிதியது பெற்றனனே. . . . (௬௭)

### கோட்புலிநாயனார்.

பெற்ற முயர்த்தோன் விளையாக் கலிபிழைத் தோர்தம அ
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத்தான் குடிக்கோ ன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலரு ள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே. (௬௮)

---

### சுந்தரமூர்த்திநாயனார்.

தருமகட் பேசினேன் வீயவே நூல்போன சங்கிலிபா ற்
புகுமணக் காதலினா லொற்றியூ ருறை புண்ணியன்ற ன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுல க
நகும்வழக்கே நன்மை யாப்புணர்ந் தானவ ளூராசே. (௬௯)

---

### பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினை யாரூ ரமரர் பிரானையடிபணிந்தி ட்
டுளைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந் து
கரசர ணாதி யவையவங் கம்பித்துக் கண்ணரு வி
சொரிதரு மங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே. (௭௰)

### பரமனையேபாடுவார்.

தொகுத்த வடமொழி தென்மொழி யாதென்றுந் தோன்றிய
மிகுத்த வியலிசை வவ்வகை யாலவ்விண் டோயுநெற்றி [தே
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண் மே
லுகுத்த மனத்தொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே. (௭௧)

### சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொடியெறிந் து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென் னி
மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரடிக்கீழ் ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபெற் றெய்திய செல்வர்களே.

### திருவாரூர்ப்பிறந்தார்கள். (௭௨)

செல்வத் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தா ர்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னாற்றிகழ ச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடி · யே
செல்வ நெறியுரு வார்க்கணித் தாய செழுநெறியே. (௭௩)

### முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார் சடையனைத் தீண்டிமுப் போதுநீ டாகமத் தி
னறிவால் வணங்கி யர்ச்சிப்பவர்நம்மையு மாண்டமரர் க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்
முறைவார் சிவபெரு மாற்குறைவாய வுலகினிலே. (௭௪) [தொ

### முழுநீறுபூசியமுனிவர்.

உலகங்கலங்கினு மூழி திரியினு முள்ளொருகா ல்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர் கா
ணலகில் பெருங்குணத் தாரூ ரமர்ந்த வரனடிக் கீ
ழிலகுவெண் ணீறுதம் மேனிக் கணியு மிறைவர்களே. (௭௫)

❋ அப்பாலுமடிச்சார்ந்தார். ❋

வருக்க மடைத்துநன் னாவலூர் மன்னவன் வண்டமிழாற்
பெருக்க மதுரத் தொகைபிறை சூடிதன் பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே. (எசு)

❋ சுந்தரமூர்த்திநாயனார். ❋

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீ டடக்கைய னீந்தபொன் னாங்குக்கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும்பொன் னுங்கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர னென்று நாங் கேட்பதுவே. (எஎ)

❋ பூசலார்நாயனார். ❋

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலயான்
கதுமெனச் செய்குவ தென்றுகொ லாமென்று கண்டுயிலா
ததுமனத் தேயெல்லி தோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்ற லுலாநின்ற வூர்தனிற் பூசலையே. (எஅ)

❋ மங்கையர்க்கரசியார். ❋

பூச லயிற்றென்ன னார்க்கன லாகப் பொறாமையினல்
வாச மலர்க்குழற் பாண்டிமா தேவியா மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழாகரர்க்கறி வித்தவரா
ணாசம் விளைத்தா ளருகந் தருக்குத்தென் னாட்டகத்தே. (எகூ)

❋ நேசநாயனார் ❋.

நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற் றவனென்பர் சைவத் தவரானாயிற்
கூட்டு மகப்படக் கோவண நெய்து கொடுத்துநன்மை
யீட்டுமக் காம்பீலிச் சாலிய நேசனை யிம்மையிலே. (அய)

❋ கோச்செங்கணாயனார். ❋

மைவைத்த கண்ட னெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் திருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்திருக் கோச்செங்க ணானெனுஞ் செம்பியனே.
(அக)

செம்பொ னணிந்துசிற் றம்பலத் தைச்சிவ லோகமெய் தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன் குலமுத லென்பர்நல் ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ மறைவரைத் தா.
னிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணானை நித்தனையே.

### திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார். (அஉ)

தனை யொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தரும்புக ழோ
னினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனை நீ ள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்செந் தமிழொடி
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே. அ௩ [சை

### சடையநாயனார்.

தலம்விளங் குந்திரு நாவலூர் தன்னிற் சடையனென்னு ங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைப்பர் குவலயத் தி
னலம்விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தி ன்
பலன்விளங் கும்படி யாரூ ரனைமுன் பயந்தமையே. (அச)

### இசைஞானியார்.

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள் ளைப்பொள்ளரனிள்பனைக்
கயந்தானுகைத்தநற்காளையையென்றுங்கபாலங்கைக்கொ [கைக்
டயந்தான் புகுமர னூரூர்ப் புனித வரன்றிருத்தா [ண்
ணயந்தா டனதுள்ளத் தென்று முரைப்பது ஞானியையே: அரு

### சுந்தரமூர்த்திநாயனார்.

ஞானவவ் வாரூ ராசரை யல்லது நாமறி யோ
மானவவ் வாக்கை யொடும்புக் கவரை வரைமொளிப்பூ ண்
வானவ ராலு மறிதற் கரிய வடகயிலை க்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.

### திருத்தொண்டத்தொகையினுள்ள
### கூட்டவடியார்கள்தனியடியார்கள்.

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெய ரா
லீட்டும் பெருந்தவத் தோரொழு பத்திரண் டாம்வினை யை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே (அஎ)

திருத்தொண்டத்தொகைப்பதிகக்

கவிகளின்முதனினைப்பு.

பணித்தநற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந் த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற வம்பறு வார்கொண்ட தோ
ரிணைத்திகழ் பொய்யடி மைக்கறைக் கண்டன் கடல்சூழ்ந்தபி ன்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே. ௮௮

பலனருள்கவி.

ஓடிடும் பஞ்சேந் திரிய மொடுக்கியென் னூழ்வினைக ள்
வாடிடும் வண்ணநின் றேத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையினுள் ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே. (௮௯)

## திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பியருளிச்செய்த

கலித்துறைத்திருவந்தாதி.




கீழ்வேளூர், அக்ஷயலிங்கந் துணை.

இதனுள் சிலகவிகள் செய்யுளோசைக்கியுந் தொடைநோக்கியுஞ் சிலவிடங்களில்-செய்யுள் விகாரங்களுஞ் சொற்றிரிவுகளும் பெற்று, கொண்டு கூட்டும் சொல்லெச்சமும் வேண்டியிருக்கின்றன அவ்விடங்களறிந்து உணர்த்தவல்லராயின் பொருட்கு திரிபில்லை யென்க.— உருத்திரபசுபதியார் திருக்கவியிலெழுத்தெண்ணுதல்பற்றி ஆரியமொழியாக உருத்ரவென்றெண்ணி ஒரெழுத்தாகவும் பண்பற்றி உருத்திரவென்று வடமொழியாகவுங் கொள்ளப்படு . . . . . . . . . . . . . . . . . . . . ம்.

௫-பக்கம் — ௨௩ம்-கவி — ௨-ம் — அடியில்.
வைத்துப்புகொன்பது — வைத்தபுகொன்றிருக்கவேண்டும்.